22nd August 1960]

SRI S. M. ANNAMALAI: இது வரையில் அந்தத் திட்டத்தினால் நல்ல பலன் ஏற்படுகிறது என்று சர்க்காருக்குத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. மேலும் மேலும் அந்தத் திட்டத்தை ஏன் விஸ்தரிக்கக்கூடாது என்று கேட்க விரும்பு கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதை விஸ்தரிப் பதற்கு இடம், அந்த பிராந்தியத்தினுடைய தகுதி இவை வேண்டியதாக இருக்கிறது.

*New Bus-stand for Cumbum*

* 371 *Q.*—SRIMATHI A. S. PONNAMMAL (on behalf of Sri N. R. THIAGARAJAN): கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க் கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா கம்பம் பஸ் ஸ்டாண்ட் எடுக்கப்பட்டு எத்தனை வருடம் ஆகிறது ?

(ஆ) புது பஸ் ஸ்டாண்ட் அமைப்பதில் உள்ள கால தாமதத்திற்குக் காரணம் என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (*a*) The bus-stand at Cumbum was closed on 4th September 1955.

(*b*) It is reported that the site proposed for the construction of the new bus-stand belongs to Sri Kambaraya Perumal Devasthanam and as such the Commissioner for Hindu Religious and Charitable Endowments has been approached for sanction and his orders in the matter are awaited.

SRIMATHI A. S. PONNAMMAL: அங்கே பஸ் ஸ்டாண்ட் அமைப்பதற்கு அந்த தேவஸ்தானத்தை இந்த அரசாங்கம் கேட்டதற்கு அவர்கள் கொடுக்காமல் இருந்ததற்குக் காரணம் என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: 1957-ம் ஆண்டு கமிஷனரைக் கேட்டதற்கு 11—8—1958-ல் 15 வருஷங் களுக்கு மட்டும் தான் அந்த இடத்தை லீசுக்கு விட முடியும் என்று கோரி இருந்தார்கள். அந்த லீசும் அந்த 15 வருஷத் திற்குத் தான். வாடகை 100 ரூபாய் கொடுக்க வேண்டியதாக இருந்தது. அத்துடன் கட்டிடம் வேறு கட்ட வேண்டியதாக இருந்தது. அப்படி அமைத்து அதை உபயோகிப்பதாக இருந்தால் அது லாபகரமாக இருக்காது என்று கருதி 50, 60 வருஷ லீசில் விட வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருக் கிறார்கள்.

*Tamarind*

* 372 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்துக்கு எத்தனை டன் புளி இறக்குமதி செய்யப்படுகிறது ?